உ

ஸ்ரீ குருப்யோ நம :

ஜய ஜய சங்கர ! ஹர ஹர சங்கர !!

# ஸ்ரீ ஆதி சங்கரர் வேதாந்தம்



## ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாத வேதஸபா

திருவல்லிக்கேணி, சென்னை-5.

1977] ஆகஸ்டு [ஞானயக்ஞம்

# ஸ்ரீ ஆதிசங்கரர் வேதாந்தம்

## 1. நிர்வாணஷட்கம்

நான் மனதும் புத்தியும் சித்தமும் அஹங்காரமும் அன்று; காதும், கண்ணும் நாக்கும், மூக்குமன்று; ஆகாய மும் பூமியும் தீயும் காற்றுமன்று; அறிவும் ஆனந்தமுமே உருக்கொண்ட சிவம் நான், சிவமே நான்.

நான் பிராணன் எனப்படுபவனன்று; நான் ஐந்து வாயுக்களன்று; ஏழுதாதுக்களுமன்று, ஐந்து கோசங்களு மன்று; வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம் எனப்படு வையுமன்று; அறிவும் ஆனந்தமும் உருக்கொண்ட சிவம் நான், சிவமே நான்.

எனக்கு விருப்பும் வெறுப்புமில்லை; பேராசையும், மதி மயக்கமுமில்லை; கொழுப்பும் மாச்சரிய பாவனையுமில்லை; அறமும், பொருளும், இன்பமும் வீடும் இல்லை. அறிவும் ஆனந்தமுமே உருக்கொண்ட சிவம் நான், சிவமே நான்.

புண்ணியமும் பாவமுமில்லை; இன்பமும் துன்பமும் இல்லை; மந்திரங்களும் தீர்த்தங்களும் வேதங்களும் யாகங் களுமில்லை; நான் புசிப்பவனன்று புசிக்கப்படுவதுமன்று, புசிக்கும் செயலுமன்று; அறிவும் ஆனந்தமுமே உருக் கொண்ட சிவம் நான்; சிவமே நான்.

எனக்குச் சாவில்லை, பயமில்லை, ஜாதிபேதமில்லை; எனக்குத் தாயில்லை, தந்தையில்லை, பிறப்புமில்லை; எனக்குச் சுற்றமுமில்லை நட்புமில்லை; எனக்கு குருவுமில்லை சீடனுமில்லை; அறிவும் ஆனந்தமுமே உருக்கொண்ட சிவம் நான், சிவமே நான்.

நான் மாறுபடாதவன், உருவில்லாதவன்; நான் எல்லா இந்திரியங்களிலும் எல்லா இடத்திலும் வியாபித் திருப்பதால் எனக்குப் பற்றின்மை என்பதில்லை; முக்தியு மில்லை பந்தமுமில்லை; அறிவும் ஆனந்தமுமே உருக் கொண்ட சிவம் நான், சிவமே நான்.

## 2. அவித்தை (அஞ்ஞானம்)

1. உடல் முதலிய தொகுதிகளை [தான்] அல்லது ஆத்மாஎனக்கொள்வது அவித்தை அல்லது அஞ்ஞானம். [வெளிச்சம் குறைந்த இடத்தில்] ஒரு பழுதை பாம்பெனக் கருதப்படுவது போலும், முத்துச்சிப்பி வெள்ளியெனக் கரு தப்படுவது போலும், அஞ்ஞானியால் உடல் ஆத்மா எனக் கருதப்படுகிறது.

2. ஒரு ஸ்தம்பம் ஆள் என்று தவருய்க்கருதப்படுவதுப்போலும் கானல் நீர் என்று கருதப்படுவதுபோலும், அஞ்ஞானியால் உடல் ஆத்மா எனக்கருதப்படுகிறது. ஸம்ஸாரம் எனப்படும் தோற்ற உலகம் மதிமயக்கத்தின் விளைவு. அது பாரமார்த்திக உண்மையன்று.

3. ஆத்மா ஒன்றேயாகியது, பாகங்களாய்ப்பிரிக்க இயலாதது; உடலோ பலபாகங்களையுடையது; அப்படியிருந்தும் உலக மக்கள் அவ்விரண்டையும் ஒன்றுபோல் எண்ணுகின்றனர்! இதையல்லாது வேறு எதை அஞ்ஞானம் எனக்கூறுவது?

4. கருமத்தால் அஞ்ஞானத்தை அழிக்க இயலாது; ஏனெனில் அது அஞ்ஞானத்திற்கு விரோதியன்று. எப்படி ஒளியால் மட்டும் இருளைப்போக்க இயலுமோ அப்படி ஞானம் ஒன்றினுல் தான் அஞ்ஞானத்தை ஒழிக்க இயலும், ஆத்மா அளவிற்குட்பட்டதாயும் கட்டுப்பட்டதாயும் தோன்றுவதற்குக் காரணம் அஞ்ஞானம்,

5, அஞ்ஞானம் அழியும் பொழுது வேற்றுமையைக் கடந்த ஆத்மாவானது, மேகம் நீங்கியதும் சூரியன் பிரகாசிப்பதுபோல் தன்னுடைய ஸ்வரூபத்தைத் தானே விளக்கிகாட்டும். உலகம் விருப்பு வெறுப்புக்களால் நிறைந்துளது. அது ஒரு கனவுக் கொப்பாகும், அஞ்ஞான நிலையில் அது உண்மைபோல் தோன்றினுலும், ஞான விழிப்பு ஏற்பட்டதும் அது பொய்யென்பது உணரப்படும்.

6. அவித்தையாகிய அஞ்ஞானம் எனப்படுவது இப்படிப்பட்டதென்று விரித்துக்கூற இயலாதது; அது அனுதி; அது இவ்வுலகத் தோற்றத்திற்குக் காரணம்; அது ஆத்மாவிடம் கற்பனை செய்யப்பட்ட உபாதி.

7. தண்ணீரில் சந்திரனுடைய பிரதி பிம்பம் ஆடுவது தண்ணீரின் ஆட்டத்தால் என்று அறியாதவன் சந்திரனே ஆடுவதாய் எண்ணுவது போல் மனதிற்குச் சொந்தமான கர்த்ருத்வம் போக்த்ருத்வம் (செய்பவனுயும் அனுபவிப்பவனுயும் இருக்குந்தன்மை) முதலிய குறுகிய பான்மைகள் ஆத்மாவிடம் தவருகக் கற்பனை செய்யப்படுகின்றன.

8. அஞ்ஞானி பயனில் ஆசை வைத்துக் கர்மத்தை மேற்கொள்ளுகிருன். இடைவிடாத தியானத்தால் 'நான் பிரம்மம்' எனும் உண்மை மனதில் பதியும் போது அது

அஞ்ஞானத்தையும் அதன் திரிசல்களையும் ஒரு ரஸாயனம் (மருந்து) நோயைப் போக்குவது போல் போக்கிவிடுகிறது.

9. ஒருவன் படகில் செல்லும் போது கரையிலுள்ள மரங்கள் படகு செல்லும் திக்கிற்கு எதிராக நகர்வது போல் அவனுக்கு பிரமை ஏற்படுகிறது. பிறவிச் சுழலில் ஆத்மா உழல்வதாய்த் தோன்றுவதும் அப்படிப்பட்ட பிரமையே. ஆத்மாவினிடம் அனாத்மக் கற்பனையே அஞ்ஞானம் எனப் படுவது. அஞ்ஞானத்தின் ஒழிவே மோக்ஷம். இருள் இருளைப் போக்காது; ஒளியே இருளைப் போக்கும். அஞ்ஞானத்தை விரட்டியடிப்பது அதற்கெதிரிடையான ஞானமேயாகும்.

10. காலையில் தோன்றி மாலையில் அழியும் அநித்தி யப் பொருள்களைப் போல் அஞ்ஞானத்தால் தோன்றும் பயன் அனைத்தும் அழிவுடையது. அஞ்ஞானியானவன் பயனில் ஆசைவைத்து கர்த்ருத்வ போக்த்ருத்வ புத்தி யுடன் கருமம் செய்கிறான். அவன்மதி மயங்கியவன். 'நான் செய்கிறேன், 'நான் செய்விக்கிறேன்', 'நான் அனுபவிக்கி றேன், 'நான் அனுபவிக்கச் செய்கிறேன்', என்றெல்லாம் எண்ணுகிறான்.

11. அஞ்ஞானிகள் தத்தம்முன் வினைக்குத் தக்கபடி உலகவிஷயமாகிற கடையைப்பரப்பி வைத்துக்கொண்டும், தங்கள் விதியை நொந்து கொண்டும் வாழ்க்கையில் ஓட்டிக்கொண்டிருக்கின்றனர். மாயை என்பது அவ்யக்தம் எனப் பெயருடையது, அது ஆதியற்றது, அஞ்ஞான வடி வானது, முக்குணமயமானது, பரமேசுவரனுடைய உன்னத சக்தியாயிருப்பது. சிறந்த புத்திமானால் தான் அதனுடைய செயல்களினின்று அது ஊகித்தறியப்படும்.

12. அந்த மாயையால் இந்த உலகம் முழுதும் பிறப் பிக்கப்படுகிறது. மாயை இருப்புடைய தன்று. இருப்பில்லா தது மன்று, இருவகைப் பட்டதுமன்று; பகுக்கப்பட்டதா கவோ, பகுக்கப்படாததாகவோ இருவகைப்பட்டதாகவோ அது இல்லை; அங்கங்களையுடையதாகவோ அங்கங்களில் லாததாகவோ, இருவகைப்பட்டதாகவோ அது இல்லை; அது மிகவும் ஆச்சரியமானது, இப்படிப்பட்டதென்று கூற முடியாத ரூபமுடையது.

13. பாம்பு என்ற மதிமயக்கம் பழுதை என்ற அறி வால் எங்ஙனம் நீங்குமோ அவ்வாறே பரிசுத்தமான இரண்

டற்ற பிரம்ம ஞானத்தால் மாயையானது அழிவுறும். பிரசித்தமான தத்தம் செயல்களால் ரஜஸ், தமஸ் ஸத்துவம் என்று நன்குணரப்பட்ட குணங்கள் அந்தமாயையைச் சார்ந்தவை. அவித்தை என்பது மனத்திற்குப் புறம்பான தன்று.

14. பிறவித்தளைக்கும் பிறவிச் சுழலுக்கும் காரணமான அவித்தை மனதேயாகும். அது (மனது) அழிந்தால் அவித்தை அனைத்தும் அழியும். ஆத்மா உடலை ஆள்வதாய் அதனுள் உறைவது; உடல் ஆளப்படுவதாய் வெளியே இருப்பது; அப்படியிருந்தும் மனிதர்கள் இரண்டையும் ஒன்ருக காண்கிருர்கள். இதைக் காட்டிலும் வேறு எதை அஞ்ஞானம் எனக் கூறலாம்?

15. ஆத்மா அறிவு மயமானது. பரிசுத்தமானது; உடல் மாம்ஸ மயமானது, அழுக்கடைந்தது; அப்படியிருந்தும் மனிதர்கள் இரண்டையும் ஒன்ருகக் காண்கின்றனர். இதைக் காட்டிலும் வேறு எதை அஞ்ஞானம் எனக் கூறலாம்? ஸத்ரூபமாகிய ஆத்மா அழிவற்றது; அஸத்ரூபமாகிய உடல் தோன்றிமறைவது; அப்படியிருந்தும் மனிதர்கள் இரண்டையும் ஒன்ருகக் காண்கின்றனர். இதைக் காட்டிலும் வேறு எதை அஞ்ஞானம் எனக் கூறலாம்?

16. மண்ணாலான குடம் முழுதும் எப்படி மண்ணேயோ அப்படி பிரம்மத்தாலான உடல் பிரம்மமே. ஆகையால் ஆத்மா என்றும் அனாத்மா என்றும் அஞ்ஞானிகள் பிரித்துக் கூறுவது அர்த்தமில்லாதது.

17, கண்ணில் (காமாலை) தோஷமுள்ளவனுக்கு வெள்ளையான பொருள்கள் மஞ்சளாய்த் தோன்றுவது போல் அஞ்ஞான தோஷமுள்ளவனுக்கு ஆத்மாஉடலாகவே தோன்றுகிறது.

18, வானத்தில் நீல நிறமும், கானலில் நீரும், கட்டையில் ஒரு புருஷனும் தோன்றுவது போல் ஆத்மாவில் உலகம் தோன்றுகிறது. வானத்தில் மேகங்கள் நகர்ந்து செல்லும் பொழுது சந்திரன் நகர்வதாய் பிரமை உண்டாகிறது.

19. அவ்வாறே அஞ்ஞானத்தால் ஒருவனுக்கு ஆத்மா உடல் என்ற பிரமை உண்டாகிறது. இங்ஙனம் அஞ்ஞானத்தால் ஆத்மாவிடம் உடலெனும் பிரமை தோன்

றுகிறது. ஆத்மானுபவத்தால் அது மீண்டும் பரமாத்மா விடம் மறைந்து போகிறது.

20. மதி மயக்கத்தால் ஒருவன் பழுதையைக் காணுமல் பாம்பைக் காணுவது போல் அஞ்ஞானியானவன் உண்மையைக் காணுமல் வியவஹார உலகைக் காண்கிருன். எல்லா உயிர்களும் இயல்பாகவே அறிவுமயமானவை. அஞ்ஞானத்தால் அவை பிறிதாய்த் தோன்றுகின்றன.

## 3. குருவும் சீடனும்

1. வேதத்தை நன்கு கற்றுணர்ந்தவரும் பாவமற்றவரும் ஆசைவாய்ப்பட்டு அழியாதவரும் பிரம்ம ஞானிகளில் சிறந்தவரும் பிரம்ம நிஷ்டையில் ஒடுங்கி நிற்பவரும் விறகில்லாத நெருப்புப்போல் அமைதியுள்ளவரும் காரணமேது மின்றிக் கடல் போன்ற கருணையுள்ளவரும் தன்னை வணங்கும் நல்லவர்களுக்கு உறவினரும் எவரோ அவரே சிறந்த குரு.

2. அந்த குருவை பக்தியுடனும் நமஸ்காரம், அடக்கம், சேவை முதலியவற்றுடனும் பூஜித்து அவர் ஸந்தோஷமாயிருக்கையில் அவரை அண்டி தான் அறிந்து கொள்ள வேண்டியதைப் பற்றிக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

3 சீடன்:—'ஆண்டவனே! உமக்கு நமஸ்காரம். வணங்கும் ஜனங்களுக்கு உண்மையான உறவினரே! கருணைக் கடலே! பிறவிக்கடலில் வீழ்ந்துள்ள என்னைக் களங்கமற்றதும் அமுதத்தைப் பொழிவதுமான உம்முடைய கடைக்கண் பார்வையால் கரையேற்றி விடும்.

4. தடுக்கமுடியாத பிறவித்துன்பமாகிய காட்டுத் தீயால் பொசுக்கப்பட்டவனும், துரதிருஷ்டமாகிய காற்றுல் அலைக்கப்பட்டவனும், அதனுல் பயந்தவனும் தங்களைச் சரணடைந்தவனுமாகிய அடியேனை- வேறு புகலிடம் நான் அறியேனுதலால்-சாவினின்று காத்தருள்வீராக.

5. குரு:-- மனவமைதியுள்ளவர்களும் வஸந்தகாலத்தைப்போல் உலகிற்கு நன்மையைச் செய்பவர்களும் பயங்கரமான பிறவிக்கடலைத் தாங்கள் தாண்டியவர்களாய்ப் பிறமனிதர்களையும் காரணம் வேண்டாமல் தாண்டுவிப்பவர்களுமான ஸாதுக்கள் உலகில் வசிக்கிருர்கள்.

6. சீடன்:—பிரபுவே! பிரம்மானந்த ரஸத்தையனுபவித்துப் பரிசுத்தமானதும், மிகக்குளிர்ச்சியானதும் தங்களுடைய வாயாகிறகலசத்திலிருந்து பெருகுவதும் கேட்பதற்கினியதுமாகிய பேச்செனும் அமுதத்தால் பிறவித்துன்பமாகிய காட்டுத்தீயின் சுவாலேகளால் பொசுக்கப்பட்ட இவனேக் குளிப்பாட்டுங்கள்.

7. பிறவிக்கடலாகிய இதைஎப்படி நான் கடப்பேன்? எனக்குச் செல்லும் வழிஎது? நான்கைக்கொள்ள வேண்டிய உபாயம் எத்தகையதாகும்? இதை ஒரு சிறிதும் நான் அறிய மாட்டேன், பிரபுவே! கருணேயால காத்தருளும். பிறவித்துன்பத்தை ஒழிக்கும் வழியில் என்னேக் கூட்டி வைத்தருளும்.

8. இவ்வாறு பேசுபவனும் தம்மைச் சரணடைந்தவனும் காட்டுத்தீ போன்ற பிறவித் துன்பத்தால் பொசுக்கப்பட்டவனுமாகிய அவனேக் கருணுரஸத்தின் கசிவுடன் கூடிய பார்வையால் உற்று நோக்கி விரைவில் பயமின்மையை அளிக்கிருர் மஹாத்மாவாகிய குரு.

9. பாதுகாப்பை விரும்புபவனும் மோக்ஷத்தில் நாட்டமுள்ளவனும் நல்ல முறையில் சொன்னதைச் செய்பவனும் அடங்கிய மனமுடையவனும் சமம் முதலிய நியமங்களே உடையவனுமாகிய அச்சீடனுக்குக் குருவானவர் கருணேயால் தத்துவோபதேசத்தைச் செய்யப்புகுவார்,

10. குரு:—கற்றுணர்ந்தவனே! பயப்படாதே, உனக்கு அழிவில்லே, பிறவிக்கடலேக் கடப்பதற்கு வழி உளது. முனிவர்கள் எதனுல் இதன் அக்கரையை அடைந்தார்களோ அந்த வழியையே உனக்குக் காட்டித் தருகிறேன், சிறந்ததொரு வழி (ஸம்சார பயத்தைப் போக்குவது) உளது. அதனுல் பிறவிக் கடலேக்கடந்து உயர்ந்த ஆனந்தத்தை அடைவாய்.

11. உபநிஷத் வாக்கியங்களின் அர்த்தத்தை ஆராய்வதால் சிறந்த அறிவு பிறக்கிறது. அதனுடைய தொடர்ச்சியாக ஸம்ஸார துக்கத்திற்கு முற்றிலும் அழிவு ஏற்படுகின்றது. சிரத்தையும் பக்தியும் தியான யோகமும் முமுக்ஷுவிற்கு முக்திக்குக் காரணங்களாக வேத வாக்கியம் கூறுகிறது. எவனெருவன் இவைகளில் நிலேயாயிருக்கின்றுனே அவனுக்கு அவித்தையால் கற்பிக்கப்பட்ட உடலாகிறதளேயினின்று விடுதலே ஏற்படுகிறது.

12. அஞ்ஞானத்தின் கூட்டுறவால் தான் பரமாத்மாவேயாகிய உனக்கு ஆத்மாவல்லாததுடன் பிணைப்பும் அதனின்றே பிறவிச்சுழலும் ஏற்பட்டுள்ளன. ஆத்மாஅனாத்மாவாகிய இரண்டையும் பற்றிய பகுத்தறிவினால் எழும் ஞானத்தீ அஞ்ஞானத்தின் செயலைவேருடன அழித்துவிடும்.

13. சீடன்:—குருதேவரே ! கருணை கூர்ந்து எனது கேள்விக்குச் செவி சாய்த்தல் வேண்டும். அதற்கு மறுமொழியைத் தங்கள் வாயிலிருந்து கேட்டு நான் வாழ்க்கைப் பயன் பூர்த்தி எய்தியவனாக ஆவேன். பந்தம் என்பது யாது ? இது எங்ஙனம் வந்தது ? இதற்கு நிலை எவ்வகைத்து ? விடுதலை எப்படி ? அனாத்மா என்பது எது? பரமாத்மா யார் ? இரண்டிற்கும் பாகுபாடு எங்ஙனம்? அனைத்தையும் கூறியருளுதல் வேண்டும்.

14. குரு:—தந்தைக்குக் கடனைத் தீர்த்து விடுவிப்பவர்களாகப் புத்திரன் முதலியவர்கள் இருக்கிறார்கள். ஆனால் அறியாமைத் தளையை நீக்கி விடுவிப்பவனாகத் தன்னையன்றி வேறு எவனுமில்லை, தலையில் வைக்கப்பட்ட பளு முதலியவற்றால் ஏற்படும் துன்பம் பிறரால் தீர்க்கப்படலாம், பசி முதலியவற்றால் ஆக்கப்பட்ட துன்பமோ எனின் தன்னாலன்றி வேறு எவராலும் தீர்க்க இயலாதது.

15. கட்டுப்பாடான உணவும் மருந்தை உட்கொள்ளுதலும் எந்த நோயாளியால் பின்பற்றப் படுகிறதோ அவனுக்கு உடல் நலம் கைகூடுவது காணப்படுகிறது. மற்றொருவனால் அனுஷ்டிக்கப்பட்ட இச்செயல்களால் இவனுக்கு உடல் நலம் சித்திப்பதென்பதில்லை.

16. அறிவின்மை ஆசை தொழில் முதலிய வலைகளாலான தளையை நீக்குவதற்குத்தனக்குத் தானேயல்லாமல் நூறுகோடி கல்பகாலமானாலும் எவன் திறமை உடையவனாவான் ? போகத்தாலன்று. ஸாங்கியத்தாலன்று கர்மத்தாலன்று, கல்வியாலன்று, பிரம்மமும் தானும் ஒன்று என்ற அறிவின் விழிப்பால் தான் முக்தி சித்திக்கிறது. வேறு வகையில் இல்லை.

17. சொற்களின் கூட்டம் ஒருபெரிய காடு போன்றது. மனதை மயக்குவதற்குக் காரணமாகின்றது. ஆகையால் உண்மையறிவை நாடுபவர்களால் ஆத்மாவைப் பற்றிய உண்மை ஒன்றே நன் முயற்சியால் அறியப்படவேண்டும்.

18. அஞ்ஞானமாகிற பாம்பினால் கடிக்கப்பட்டவனுக்கு பிரம்ம ஞானமாகிற மருந்தல்லாமல் வேதங்களாலும், சாஸ்திரங்களாலும் ஆவதென்ன ? மந்திரங்களாலாவ தென்ன? வேறு மருந்துக்களாலாவதென்ன? ஆகையால் எல்லாவிதமான வழிகளையும் கைக்கொண்டு நோய் முதலி யவற்றினின்று விடுபட முயலுவதுபோல்.

19. பிறவித்தளையினின்றும் விடுபடுவதற்குத் தனக் குத்தானாகவே அறிவாளிகளால் முயற்சி செய்யப்பட வேண்டும். முக்திக்கு முதல்படி நிலையற்ற பொருள்களில் தீவிரமான வைராக்கியம் ; பிறகு அகக்கரணங்களின் அடக்கமும், புறக்கரணங்களின் அடக்கமும் ; அதன் பின் பொறுமையும் பற்றுவைத்த எல்லாக் கருமங்களையும் அறவே துறந்துவிடுதலும்.

20. சிரவணத்தாலும் மனனத்தாலும் நீண்டகாலம் தொடர்ந்த இடைவிடாத தியானத்தாலும் முனிவன் ஒப்புயர்வற்ற நிர்வி கல்ப ஸமாதி நிலையையடைந்து பிரம்ம நிர்வாணப் பேரின்பத்தை அனுபவிக்கிறான்.

21. ஆலமரத்தடியில் ஒருவிசித்திரம் காணப்படுகிறது. குருயௌவனமாகவும், சீடர்கள் கிழவர்களாவும் இருக் கிறார்கள். குருவினுடைய உபதேசம் மௌனமாய் நிகழ் கிறது. சீடர்கள் சந்தேகங்களெல்லாம் முற்றுந் தீர்ந்தவர் களாகின்றனர்

22. எனக்குச் சரண் தாயுமன்று, தந்தையுமன்று, மக்களுமன்று, சகோதரர்களுமன்று, மற்றெவருமன்று. என்னுடைய குரு எந்தப் பாதத்தை என் தலையில் சூட்டினாரோ அதுவே எனக்குச் சரண்.

23. என் குருநாதரின் கருணாகடாக்ஷம் பூர்ண சந்திர னுடைய கிரணங்களைப் போலுள்ளது; அது விரும்பிய வரத்தையளிப்பதில் கற்பக விருக்ஷத்தைப் போலுள்ளது; அது மனதிலுள்ள துன்பத்தை அறவே போக்கிவிடுகிறது.

24. மஹாவிஷ்ணு ஸ்வரூபியாகிய என் குருநாதர் சூரியனைப்போல் என்னுடைய மனவெளியில் பிரகாசித்துக் கொண்டு அஞ்ஞான இருளைப்போக்கி ஞானானுபவமாகிற தாமரையை மலரச் செய்கிறார்.

# ஆத்மா

1. ஸத்தும் சித்துமே வடிவான ஆத்மாவை இடை விடாத அப்பியாஸத்தாலன்றி அறியமுடியாது. ஆகையால் ஞானத்தை நாடுபவன் தன்னுடைய லக்ஷியத்தையடைய நீண்டகாலம் தியானம் பழகவேண்டும்.

2. ஒரு விளக்கானது குடம் முதலியவற்றைப் பிரகாசப் படுத்துவதுபோல் ஆத்மா ஒன்றே புத்தி முதலியவற்றையும் இந்திரியங்களையும் பிரகாசப்படுத்துகிறது. ஜடமான அவற் றால் ஆத்மா பிரகாசமடைவதில்லை. எப்படி ஒரு விளக் கைக் காண்பதற்கு வேறொரு விளக்கு வேண்டப்படுவ தில்லையோ அப்படியே அறிவுவடிவான ஆத்மா தன்னைப் பிரகாசப்படுத்துவதற்கு வேறொரு அறிவை வேண்டுவதில்லை.

3. ஆத்மா தன்னை ஜீவன் என்று கொண்டால், ஒருவன் பழுதையைப் பாம்பு என்று கொண்டால் பயப்படு வதுபோல் பயத்துக்குள்ளாகிறது. தான் ஜீவனன்று தான் பரமாத்மா என்று அறிந்தனுபவிக்கும் பொழுது பயமின் மையை மீண்டும் அடைகிறது.

புத்திமான் தன்னுடைய அறிவால் காணும் உலகனைத் தையும் ஆத்மாவில் ஒடுக்கி ஆத்மாவானது களங்கமற்ற ஆகாயம் போன்றதென்று எப்பொழுதும் தியானிக்க வேண்டும்.

4. அருணோதயத்தால் இருளானது முதலில் நீக்கப் பட்டபின் சூரியன் தானே பிரகாசிப்பதுபோல் அஞ்ஞானம் ஞானத்தால் நீக்கப்பட்டபின் ஆத்மா தானே பிரகாசிக்கும்.

5. ஆத்மா எப்பொழுதும் அடையப்பட்டதாயிருப்பி னும் அஞ்ஞானத்தால் அடையப்படாததுபோல் தோன்று கிறது. அஞ்ஞானம் நீங்கியதும் ஒருவன் தன் கழுத்தில் ஏற்கனவே இருந்த ஆபரணத்தைக் கண்டு கொள்வது போல் ஆத்மா அடையப்பட்டதுபோல் பிரகாசிக்கிறது.

6, உலகனைத்தும் ஆத்மாவே; ஆத்மாவிற்குப் புறம்பாக ஒரு சிறிதுமில்லை. குடம் முதலியவை மண்ணெனக் காண் பதுபோல் ஞானி அனைத்தையும் ஆத்மாவாய்க் காண்கிறான்.

7. செயல்களைத்துறந்து, காலம், தேசம், திக்கு முதலி யவைகளைக் கருதாமல் என்றும் இன்பவடிவானதும், மாசற்ற

தும், குளிர் முதலியவற்றைப் போக்குவதும் ஆகிய ஆத்மா எனும் புண்ணிய பூமியை எவன் எவன் நாடுகிறானோ அவன் அனைத்தையும் அறிந்தவனாகவும், எங்கும் நிறைந்தவனாகவும், சாவைக் கடந்தவனாகவும் விளங்குவான்.

8. உடலில் ஒருகை வெட்டியெறியப்பட்டால் உடலுக்குக்குறைவேற்படும்பொழுது ஆத்மாவிற்குக் குறைவேற்படுவதில்லை; மிகுதியுள்ள உடலின் அங்கங்களிலும் ஆத்மாவிற்கு ஒரு பற்றுமில்லை.

ஒருவனுக்கு, 'நான்' 'என்னுடையது' என்ற சொற்கள் எப்பொழுது முற்றும் அர்த்தமற்றவையாகின்றனவோ அப்பொழுது அவன் ஆத்மஞானியாகின்றான்.

9. எல்லா உயிர்களிலும் உறையும் ஒரே ஆத்மாவைக் கண்டு கொண்டதாய்க் கருதுபவன் அப்பொழுதும் தனக்குப் பகைவர்கள் இருப்பதாய்க் கருதுவானேயானால் அவன் நெருப்பைக் குளிர்ந்ததெனக் கொள்பவனாவான்.

10. ஆத்மாவையே எப்பொழுதும் தியானம் செய்பவனுக்கு காலம் முதலியவற்றால் ஆகவேண்டியது ஒன்றுமில்லை, ஏனெனில் ஆத்மாவிற்குக் காலம் தேசம் திக்கு காரிய காரணம் முதலியவற்றுடன் ஒரு தொடர்புமில்லை.

11. எங்ஙனம் பரிசுத்தமானதும் எல்லையற்றதுமான ஆகாயம் ஒரு பொருளுடன் பற்றுக் கொள்வதும் ஒரு பொருளால் கறைபடுவதும் இல்லையோ அங்ஙனமே ஆத்மா மூப்பு, சாவு, அச்சம் முதலியவற்றினின்று விடுபட்டதாய் எப்பொழுதும் ஒரு படித்தாய் விளங்குகிறது.

12. எப்பொழுதும் முக்தனான எனக்குச் செயலேதும் இல்லை; ஆத்மாபரிசுத்தமான அறிவொளி வடிவானது; அதனிடம் அஞ்ஞான இருளில்லை.

ஆத்மாவிற்கு உபாதிகள் ஏதுமில்லை; அது வர்ணிக்க முடியாதது, பகுக்க முடியாதது, குணங்களற்றது, பரிசுத்தமானது, வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாதது.

13. விழிப்பு, கனவு, உறக்கம் என்ற மாறுபாடுகளை உடைய சித்த விருத்தியைப் பிரகாசப்படுத்திக்கொண்டு எங்கும் நிறைந்ததாயும் எல்லா உயிர்களிலும் ஒன்றாயுமிருக்கும்

ஆத்மா அனைத்திற்கும் சாக்ஷியாயுளது. ஆத்மா கண்டனுபவிக்கப்பட்டால் இருதயத்துள்ள முடிச்சுகள் அவிழ்கின்றன. சந்தேகங்களெல்லாம் ஒழிகின்றன, கருமங்களெல்லாம் நாசமடைகின்றன என்று உபநிஷதம் கூறுகிறது.

14. ஒளிவடிவாயுள்ள சூரியனிடம் எவ்வாறு இருள் இல்லையோ அவ்வாறே அறிவு வடிவான ஆத்மாவில் அஞ்ஞானத்திற்கிடமில்லை.

அவ்வாறே மாறுபாடற்ற ஆத்மாவில் மாறுபடும் நிலைகளுக்கிடமில்லை. அப்படி மாறுபடுமேயானால் அது அழிவுடையதாய்விடும்.

15 ஒருவன் சுருதியாலும் யுக்தியாலும் அறிந்துகொள்ள வேண்டிய பெரிய விஷயம் தான் ஆத்மா என்பதேயாம். அஹங்காரம் முதலிய அனாத்மாவை ஆத்மா என்று கொள்வது அறிவாகாது. அனாத்மாவை ஆத்மா எனக் கருதும் பிழையை ஒருவன் விட்டு விலகவேண்டும்.

16. "ஆத்மா இங்கே இப்பொழுது உளது' 'இருதயத்திலுள்ள முடிச்சுகள் எல்லாம் அவிழ்கின்றன' என்பவை போன்ற சுருதி வாக்கியங்களைக் கொண்டு ஒருவன் ஜீவாத்மாவை பிரம்மம் என்று இங்கேயே இப்பொழுதே கண்டு கொள்ளவேண்டும்.

17. ஆத்மா வெளியே உள்ள பொருள்களைப்போல் அறியப்படுவதன்று. அதில் பாகுபாடுகளும் வேற்றுமைகளும் இல்லை. ஆகையால் அதை எவராலும் கொள்ளவோ தள்ளவோ இயலாது.

உள்ளும் புறமும் எங்கும் வியாபித்ததும் பிறப்பு தேய்வு மூப்புசாவு முதலியவற்றிற்கப்பாற்பட்டதுமான ஆத்மா தான் என்று அறிந்து கொண்ட பின் ஒருவன் எதற்காக ஒரு சிறிதேனும் அஞ்சவேண்டும்?

18. (மாயாப்பிரபஞ்சத்திற்கு) வித்தாகிய அஞ்ஞானம் இல்லையென்ற நிச்சயத்தையடைந்தவனும் ஜீவனும் பிரம்மமும் ஒன்றே என்பதை அறிந்தவனும் எங்ஙனம் பிறவியையடைவான்?

ஆத்மா என்பது ஒருவருக்கும் ஒரு காலத்தும் தெரியாத

ஒரு பொருளோ அல்லது கொள்ளத் தக்கதோ தள்ளத் தக்கதோ ஆகாது.

19. தன்னுடைய உடலை ஒருவன் அறிவதற்கு எவ்வாறு வெளியிலிருந்து அத்தாட்சி வேண்டுவதில்லையோ அவ்வாறே தன்னுடைய ஆத்மாவை அறிவதற்கும் வெளியிலிருந்து அத்தாட்சி ஏதும் வேண்டுவதில்லை.

20. எல்லா ஆசைகளையும் விட்டு ஆத்மாவைக் கண்டு அனுபவிக்கவேண்டும் என்ற தீவிரமான ஆசைமட்டும் தான் ஆத்மதரிசனத்திற்கு அவசியமான ஸாதனம்.

ஜீவனும் பிரம்மமும் ஒன்றே என்று அறிந்தனுபவிப்பதற்குமுன் இந்திரியங்களால் உணரப்படும் உலகமும் மற்ற பொருள்களும் அவ்வவற்றின் தனி உருவங்களை உடையவையாயிருக்கின்றன.

21. எதுவரை ஒருவன் உடலேதான் என்ற எண்ணமுடையவனே அதாவது ஆத்மானுபவம் பெறவில்லையோ அதுவரை உலகக் காட்சியும் அதனுடைய உண்மையும் பாதிக்கப்படுவதில்லை.

ஒருவன் தனது ஆத்மாவைப் புண்ணியம், பாவம், சென்றது வருவது, காரணம் காரியம் என்ற எல்லாத் தளைகளினின்றும் விலகிச் சுதந்திரமாய் விளங்கும் பரப்பிரம்மம் என்று அறியவேண்டும்.

22. விழிப்பிலும் கனவிலும் எப்படியோ அப்படியே ஆழ்ந்த உறக்கத்திலும் ஆத்மாவின் சக்தி மங்காததாலும் மாறுபடாததாலும் ஆத்மா அறிவுடன் கூடியே இருக்கிறது. 'எங்கு துவைதம் உண்டோ' என்று சுருதிகூறுகிறபடி அறியும் பொருள்களில் தான் வேறுபாடு.

23. எப்படி ஒரு கயிறு அதை உள்ளபடி அறிந்தவனுக்கும் அறியாதவனுக்கும் இரண்டு வகையாகக் காட்சியளிக்கிறதோ அப்படியே ஆத்மா எப்பொழுதும் (ஞானிக்குப்) பரிசுத்தமாயிருப்பினும் அஞ்ஞானிக்கு அழுக்கடைந்தது போல் தோன்றுகிறது. பரமாத்மா பரமானந்த ஸ்வரூபமுடையதாகையால் அதில் அறிபவன், அறிவு, அறியப்படுவது என்ற வேற்றுமைக்கு இடமில்லை. அது ஒன்றாகவே பிரகாசிக்கிறது.

24. நான் தேவதைகளை வணங்கவில்லை. தேவதைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவன் எந்த தேவதையையும் வணங்க மாட்டான். அந்த நிலையில் அவனுக்குக் கடமைகளும் இல்லை, எல்லாச் செயல்களுக்கும் மூலமாயிருக்கும் எனது ஆத்மாவையே நான் மேன்மேலும் வணங்குகிறேன்.

## பஜகோவிந்தம்

1. பகலும் இரவும் மாலையும் காலையும் பனிக்காலமும் இளவேனிற்காலமும் திரும்பித் திரும்பி வந்து கொண்டிருக்கின்றன. இவ்வாறு காலம் விளையாடுகிறது; வயது கழிகிறது; என்றாலும் காற்றுப்போல் வியாபித்திருக்கும் ஆசைமட்டும் மனிதனை விடுவதில்லை.

2. மதிமயங்கியவனே! மரண சமயம் நெருங்கிய பொழுது இலக்கணச் சூத்திரம் உன்னை ஒரு பொழுதும் காப்பாற்றாது. ஆகையால் கோவிந்தனைச் சேவி, கோவிந்தனைச்சேவி, கோவிந்தனைச் சேவி.

எதுவரை பொருள் தேடுவதில் ஒருவன் பற்றுள்ளவனாயிருக்கிறானோ அதுவரை அவனுடைய சுற்றம் அவனிடம் ஆசைவைத்திருக்கும். நோயினால் உடல் தளர்ந்துபோன பின்பு அவன் உயிருடனிருந்தால் ஒருவரும் அவனுடைய சமாசாரத்தை விசாரிப்பதில்லை.

3. சடை தரித்தவனானாலும், மொட்டையடித்தவனானாலும், குடுமியைக் கத்தரித்தவனானாலும், காவித் துணியணிந்து பலவாறான வேஷம் பூண்டவனானாலும், மதி மங்கியவன் பார்த்தாலும் பார்க்காதவனேயாகிறான். பலவகைப் பட்ட வேஷமெல்லாம் வயிற்றுப் பிழைப்பாகவே முடிகின்றது.

4. எவனால் பகவத்கீதை சிறிதளவாவது படிக்கப் பட்டதோ, கங்கை நீர் ஒரு துளியாவது பருகப்பட்டதோ, முராரியான பகவானுடைய பூஜை ஒரு தடவையாவது செய்யப்பட்டதோ அவனுக்கு யமபயமில்லை.

5. அங்கம் தளர்ந்து விட்டது, தலை நரைத்து விட்டது. வாய் பல் இல்லாததாக ஆகிவிட்டது; கிழவன் கோலை ஊன்றிக்கொண்டு நடக்கிறான்; என்றாலும் அவனுடைய மாம்ஸ பிண்டத்தை ஆசைவிடவில்லை.

6. குழந்தையாயிருக்கும் பொழுது விளையாட்டில் பற்று; யௌவனத்தில் பருவப் பெண்ணிடம் பற்று; வயது முதிர்ந்தபொழுது கவலை; பரப்பிரம்மத்திடம் பற்றுக் கொண்டவன்எவனுமில்லை,

7. இறந்தால் மறுபடி பிறப்பு; பிறந்தால் மறுபடி இறப்பு; மறுபடியும் ஒரு தாய் வயிற்றில் முடங்குதல்; கரை காணாததும் கடத்தற்கரியதுமான இவ்வாழ்க்கைக் கடலினின்று என்னைக் காத்தருளும், பகவானே!

8. பகலுக்குப் பின் பகலும் இரவுக்குப்பின் இரவும், பக்ஷங்களும் மாதங்களும், கோடைகாலமும் குளிர்காலமும், வருஷத்திற்குப் பின் வருஷமும் மாறாமல் வந்து போய்க் கொண்டிருக்கின்றன. வீண் ஆசைகளும் ஸங்கல்பங்களும் எவனையும் விட்டுப் போவதாயில்லை.

9. வயது கடந்தால் காமக்கிளர்ச்சி என்ன ஆகிறது? நீர் வற்றினால் குளம் என்ன ஆகிறது ? பொருள் அழிந்தால் சுற்றம் என்ன ஆகிறது? உண்மை உணரப் பட்டால் ஸம்சாரம் என்ன ஆகிறது?

10. ஸ்திரீகளின் நகில்களையும் நாபிப்பிரதேசத்தை யும் பார்த்து மதிமயங்காதே. இவை மாம்ஸம் கொழுப்பு

இவைகளின் விகாரமென்று அடிக்கடி எண்ணி மனதில் பொருட்படுத்தாமலிரு.

11. நீ யார்? நான் யார்? எங்கிருந்து வந்தோம்? என் தாய் யார்? தந்தை யார்? இப்படித் தன்னுடைய பிறவித்தளைகளை நன்ருய் விசாரித்துப் பார்த்து இவை யெல்லாம் கனவுக்கொப்பானவை எனக் கண்டு கொள்.

12. எதுவரை மூச்சுக்காற்றுஉடலில் ஓடிக் கொண்டிருக்கிறதோ அதுவரை வீட்டில் உன்னுடைய நலத்தைப் பற்றிக் கேட்பார்கள், மூச்சுக் காற்றுப் போய் உடலுக்கு அபாயம் ஏற்பட்டால் மனைவிகூட அவ்வுடலைக் கண்டு அஞ்சுவாள்.

காமசுகத்திற்கு எவன் வசப்படுகிருனோ அவன் நோய் வாய்ப்படுகிருன். மரணம் ஒன்றே முடிவு என்று கண்டும் ஒருவனும் பாவத்தினின்று விலகுவதில்லை.

14. மதிகெட்டவனே! பொருள் சேர்ப்பதில் ஆசையை விட்டொழி. வீணான ஆசைகளினின்று விலகிய நல்ல எண்ணங்களை மனதில் சிந்தனை செய். உன்னுடைய நிலைக்கேற்ற கருமங்களைச் செய்வதால் கிடைக்கக் கூடிய பொருளைக் கொண்டு மனதைச் சந்தோஷப்படுத்திக்கொள்.

15. பொருள் எப்பொழுதுமே துன்பம் விளைவிப்ப தென்பதை மனதில் வைத்துக்கொள். அதனுல் சிறிதளவு சுகம் கூட இல்லை என்பது உண்மை. பெற்ற பிள்ளையிட மிருந்துங்கூட, பொருள் படைத்தவர்களுக்கு பயம் ஏற்படு கிறது. இப்படித் தான் எல்லா இடங்களிலும் காணப்படு கிறது.

16. பொருள் சுற்றம் யௌவனம் முதலியவற்றைப் பற்றி கர்வம் கொள்ளாதே. காலம் ஒரு நிமிஷத்தில் எல்லா

வற்றையும் கொண்டு போய்விடும், மாயா மயமான இவ் வுலகத்தையும் விட்டு பிரம்மபதத்தை அறிந்து கொண்டு அதனுட் புகுவாயாக.

காமத்தையும் கோபத்தையும் பேராசையையும் மதி மயக்கத்தையும் ஒழித்து அஞ்ஞானத்தினின்று விடுபட்ட உனது உண்மை ஸ்வரூபத்தைப்பார். ஆத்மஞானமில்லாத மூடர்கள் நரகத்தில் வீழ்ந்து துன்பத்திற்காளாகிறார்கள்.

சத்துருவென்றும் மித்திரனென்றும், புத்திரனென்றும் உறவினனென்றும் வேற்றுமையைப் பாராதே. விஷ்ணு பதத்தை நீ விரும்பினல் யாரிடத்தும் பகைமையும் நட்பும் பாராட்டாமல் எல்லோரையும் எல்லாவற்றையும் சமமாகப் பார்.

பிராணாயாமம், மனதை உள்முகமாய்த் திருப்புதல், அழியும் பொருளையும் அழியாப் பொருளையும் ஆராய்ந் தறிதல்,ஜபமும் ஸமாதியும் கூடுதல் ஆகிய மகத்தான ஸாதனைகளில் உன்னுடைய முழுமனதையும் செலுத்து.

தாமரையிலை மேலுள்ள தண்ணீர் மிகவும் சஞ்சல மானது. அதே மாதிரிதான் (உடலில்) உயிரும் அதிசயிக் கும்படி சஞ்சலமானது. உலகனைத்தும் நோயாலும் அகங் காரத்தாலும் பீடிக்கப்பட்டுத் துன்பத்தால் கொல்லப் படுகிறதென்பதை அறிவாயாக.

உன்னுடைய குருவின் திருவடித் தாமரைகளைப் போற்றி உலகத்திற் கடிமையாயிருப்பதினின்று உன்னை விடுத்துக்கொள். இந்திரியங்களையும் மனதையும் அடக்கி பகவானை உன் இதயத்தில் பார்.

## நான் யார்?

1. நான் ஈசுவரர்களுக்கு ஈசுவரன். என்னிடத்தில் பொருமையும் பகைமையும் ஒரு சிறிதும் இல்லை. இலக்ஷியத்தை அடைய முயல்பவர்களின் மனோரதத்தைப் பூர்த்தி செய்விப்பவன் எவனோ அவன் நானே.

நான் அழியாதவன், என்னை அழிக்கமுடியாது. நான் ஈசுவரன், உயிருக்கு உயிராகியவன். நான் ஒப்பிலா ஆனந்தம் நிறைந்தவன், நான் பரமசிவன், நான் அளவிலடங்காதவன்.

2. ஆத்மாவை அறிந்தவர்களில் நான் சிறந்தவன். ஆத்மானந்தத்தை அனுபவிப்பவன். பாலர்களும் படிப்பில்லாதவர்களுங்கூட எந்த ஆத்மாவின் பெருமையை 'நான்' என்ற உணர்வில் கண்டனுபவிக்கிறார்களோ அந்த ஆத்மா நான்.

3. ஆனந்தமும் அறிவும் ஆத்மானுபவமும் நிறைந்தவன் நான். காணப்படும் பிரகிருதியைப் பற்றிய எண்ணத்திலிருந்து நான் வெகுதூரம் விலகியவன். எது அப்ராகிருதமோ அதனால் நான் என் உள்ளத்தில் மழ்கிறேன்.

நான் தான் உலகங்களின் ஆதி, உபநிஷத உத்யானத்தில் விளையாடுபவன் நான். பொங்கி வழியும் துக்கக் கடலை வற்றச் செய்யும் வடவாக்னி நான்.

4. மேலும் கீழும் நாற்புறங்களிலும் என்னுடைய அதிசயமான பெருமைகளால் நான் அனைத்தையும் வியாபித்து நிற்கிறேன். வாதத்தாலும் பிரதிவாதத்தாலும் ஆராய்ச்சியாலும் நிர்ணயிக்கப்படுவதாய்க்காணும் பரம புருஷன் நானே.

நான் ரிஷி; ரிஷிகணங்களெல்லாம் நானே. சிருஷ்டியும் நான், சிருஷ்டிக்கப்படுவதும் நான். செல்வத்தின் நிறைவும், வளர்ச்சியும்நான், திருப்தியும் திருப்தி தீபத்தின் ஒளியும் நான்.

5. பிறப்பு, தேய்தல், மூப்பு, சாவு ஆகிய மாறுதல்களினின்று நான் விடுபட்டவன்; நான் உடலன்று. சப்தம்

ருசி முதலிய இந்திரிய விஷயங்களில் எனக்குப் பற்றில்லை; ஏனெனில் எனக்கு இந்திரியங்கள் இல்லை.

துக்கமும் பற்றும் பொருமையும் பயமும் எனக்கில்லை; ஏனெனில் நான்மனதன்று. உபநிஷதம்கூறுகிறது; அவனுக்குப் பிராணனுமில்லை. மனதுமில்லை. அவன் பரிசுத்தமானவன், உயர்ந்ததற்கெல்லாம் உயர்ந்தவன், அழிவற்றவன்.

6. என்றுமுள்ளதாய் மாசற்றதாய், பற்றற்றதாய் ஒன்றேயாகிப் பிளவு படாததாய், இரண்டற்றதாய், ஆனந்தமும்ஸத்தியமும் அறிவும் உருக்கொண்டதாய், அளவு படாததாய் உள்ள பரப்பிரம்மம் நானே.

ஆகாசத்தைப் போல் நான் உள்ளேயும் வெளியேயும் நிரம்பி நிற்கிறேன்; மாறுபடாமல் அனைத்திலும் ஒன்றேயாகிப் பரிசுத்தமாய்ப் பற்றற்று மாசற்றுத் திரிபற்று நான் பரிசுத்தமாயிருக்கிறேன்.

7. குணங்களும் செயலுமின்றி நான் என்றுமுள்ளவனாய்ப் பரிசுத்தனாய், அழுக்கும் ஆசையும் அற்றவனாய், மாறுபாடற்றவனாய் வடிவற்றவனாய் எப்பொழுதும் முக்தனாய் இருக்கிறேன்.

8. எனக்கு இந்திரியசுகங்களில் விருப்பமில்லை. ஆத்மானுபவமும் அறிவும் ஆனந்தமும் என்னிடம் நிரம்பி யிருக்கின்றன. வெளியுலகத்தைப்பற்றிய எண்ணத்தினின்று நான் வெகு தூரம் விலகியுள்ளேன். வெளியே காணப்படாதது எதுவோ அதனால் என்னுள்ளம் மகிழ்கிறது.

9. மஹாபூதங்களினும் நான் பெரியவனாதலால் அவற்றில் பொதிந்துள்ள சக்தியின் நன்மையெல்லாம் நானே. காமதேவன் உற்பத்தி செய்யும் உணர்ச்சி வேகம் என்னிடம் இல்லை.

நான் ஒன்றாயிருப்பவன். 'இது அது.' 'இப்படி அப்படி, 'இதைப் போல்' என்ற வேறுபாடு என்னிடம் இல்லை. ஆசையற்றவர்களால் பூஜிக்தற்குரியவன் எவனோ

அவன் நானே. புண்ணியம் பாவம் என்ற உள்ளுணர்வு என்னிடம் இல்லை.

10. ஒற்றுமையை விளங்கவைப்பவன் நான். வேதாந்த மகாவாக்கியத்தின் உண்மையை உணர்ந்து பரி சுத்தமான மனது படைத்தவர்களிடம் விளங்கும் பரதத் துவம் நானே. இரவின் இருள் போன்ற அஞ்ஞானத்தைப் போக்கும் சூரியன் நானே

11. தீமையைப் போக்கும் மருந்து நான். நான் குணமும் குறியுமற்றவன். நான் கருணையின் எல்லை. (அறம் பொருள் இன்பம் வீடு என்ற) நாலுவித புருஷார்த் தங்களையும் அளித்து அனைவரையும் பலவாறுய் விடுவிப் பவன் நானே.

12. மூலிகைகளின் ஸாரம் நானே. உலகமாகிற சேலையின் ஊடும் பாவும் நானே. ஓங்காரமெனும் தாமரை யினின்று எழும் ஆனந்தமாகிய நறுமணத்தால் மதங் கொண்ட தேனீ போன்றவன் நான்.

13. அறிவும் நானே. அறியப்படுவதும் நானே. அறி பவன் நானே. அறிவின் சாதனங்களும் நானே. அறிபவன் அறிவு அறியப்படுவதென்ற மூன்றையும் கடந்து கேவலம் ஸத்ரூபமாயுள்ள ஆத்மாவும் நானே.

14. பக்தியும் நானே, பூஜையும் நானே; மோக்ஷமும் நானே. மோக்ஷஸாதனமும் நானே; அனைத்துயிர்களையும் ஆள்பவன் நானே; சென்றது இருப்பது வருவது என்ற அனைத்திற்கும் மூலகாரணம் நானே.

15. நெருப்பிலிட்ட தங்கம் அழுக்கு நீங்கிப் பிர காசிப்பதுபோல் கேள்வி முதலியவற்றுல் கொழுந்து விட் டெரியும் ஞானத்தீயில் பரிசுத்தமான ஜீவன் எல்லா மலங் களும் நீங்கித் தன்னுடைய சுய ஒளியுடன் பிரகாசிக் கிருன்.

ஒன்றை மற்றென்றுய்க் கொள்ளும் மதியீனம் பரி பூர்ண ஞானத்தாலன்றி வேறெதனுலும் நீங்காது. ஜீவன்

பிரம்மமே என்று அறிந்தனுபவிப்பதுதான் பரிபூர்ண ஞான மென்பது வேதத்தின் முடிவு.

16. வைராக்கியத்தின் பயன் ஞானம்; ஞானத்தின் பயன் விஷய சுகங்களை நாடாமல் ஆத்மானந்தத்தையனுபவித்தல்; அதனால் விளைவது பரமசாந்தி.

அகங்காரத்தின் வேரையறுத்து அதை எரித்துச் சாம்பலாக்குவது உண்மையான ஞானத்தின் இயல்பு. அப்பொழுது செயல் புரிபவனும் இல்லை. செயலின் பயனை அனுபவிப்பவனும் இல்லை.

17. முக்தியை விரும்பி ஒருவன் கங்காஸாகரத்திற்கு யாத்திரை செல்லலாம், விரதமிருக்கலாம், ஏழைகளுக்கு தானம் செய்யலாம்; ஆனால் ஞானமின்றி இவை முக்தியளிக்க மாட்டா.

ஆத்மஞானம் இங்கேயே இப்பொழுதே முக்தியளிக்கிறது. ஞானத்திலிருந்துதான் முக்தி என்பது உபநிஷதங்களில் நிரூபிக்கப்பட்ட உண்மை.

ஞானத்தால் இங்கேயே, இப்பொழுதே, உடனே பயன்கிட்டுவதால், ஞானத்தால் என்ன பயன் என்ற அச்சத்திற்கு இடமே இல்லை.

18. வேதாந்தத்தின் விஷயமான ஞானம் சித்தித்தால், ஜீவனேபிரம்மம் என்ற அனுபவம் ஏற்படும். அதனால் ஒருவன் பிறவித்தளையினின்று முற்றும் விடுபடுகிறான்.

ஆத்ம ஞானத்திற்கொப்பானது வேறெதுவுமில்லாமையால், ஒருவன் எப்பொழுதும் சீடனுடைய குணங்களைக் கைக்கொண்டு ஞானத்தைச் சம்பாதித்துப் பிறவிக் கடலைக் கடந்து செல்ல வேண்டும்.

19. எனக்கு ஞானத்தை அளித்து அஞ்ஞானம் நிறைந்ததும் பிறப்பிறப்பு வடிவானதுமான ஸம்ஸாரஸாகரத்தினின்று என்னைக் காப்பாற்றியவரும், போற்றுதற்குரியவர்களிற் சிறந்தவரும், எல்லாமறிந்தவருமான எனது குருநாதரை வணங்குகிறேன்.

அஞ்ஞான இருளிருந்தபொழுது இவ்வுலகம் முழுவதும் உண்மையெனப் புலப்பட்டது. ஞான சூரியன் உதித்தபிறகு உலகை நான் காணவில்லை. இது ஆச்சரியம்.

# பிரம்மம்

1. ஸத்-சித்-ஆனந்தமாயும், இரண்டற்றதாயும், அளவு கடந்ததாயும், என்றுமுளதாயும், ஒன்றேயாயும், உள்ளதையெல்லாம் வியாபித்து நிற்பதாயும் எது உளதோ அதை பிரம்மம் என்று அறிந்தனுபவிப்பாயாக.

இரண்டற்றதாயும், பிளவுபடாததாயும், ஒன்றேயாயும் ஆனந்தவடிவாயும், காணும் பொருளெல்லாம் கனவு போலொதுக்கப்பட்ட பின் அடிப்படையாக எஞ்சி நிற்பதென்று வேதாந்தத்தில் விளக்கப்படுவதாயும் எது உளதோ அதை பிரம்மம் என்று அறிந்தனுபவிப்பாயாக.

2. எதையடைந்தபின் வேறு அடையவேண்டியது எதுவுமில்லையோ, எந்த ஆனந்தம் அனுபவிக்கப்பட்ட பின் அதற்கு மீறிய ஆனந்தம் வேறொன்று வேண்டப்படுவதில்லையோ, எதையறிந்தபின் வேறு அறிய வேண்டியது எதுவுமில்லையோ அதை பிரம்மம் என்று அறிந்தனுபவிப்பாயாக.

3. பிரம்மா இந்திரன் முதலிய தேவர்கள் அவரவர் நிலைக்குத் தகுந்தபடி அந்த அளவு கடந்த பிரம்ம ஆனந்தத்தின் சில திவலைகளையே அனுபவித்து ஆனந்தமுடையவர்களாகிறார்கள்.

எல்லாப் பொருள்களும் அதில் பிணைக்கப் பட்டுள்ளன; எல்லாச் செயல்களும் அந்த அறிவுடன் தொடர்புள்ளன; பாலில் எங்கும் நெய் வியாபித்திருப்பது போல் பிரம்மம் உலகில் எங்கும் வியாபித்திருக்கிறது.

4. ஸ்தூலமாயில்லாமலும் ஸூக்ஷ்மமாயில்லாமலும், நீளமாயில்லாமலும், குட்டையாயில்லாமலும் பிறப்பில்லாமலும், தேய்வில்லாமலும், வடிவும் குணமும் வண்ணமும் இல்லாமலும் எது உளதோ அதை பிரம்மம் என்று அறிந்தனுபவிப்பாயாக.

5. சூரியனையும் சந்திரனையும் போன்றே ஒளி மண்டலங்கள் எதனுடைய ஒளியால் பிரகாசிக்கின்றனவோ ஆனால் எது அவற்றின் ஒளியால் பிரகாசிக்கப்பட மாட்டாதோ, மேலும் அனைத்துமே எதனால் பிரகாசிக்கின்றதோ அதை பிரம்மம் என்று அறிந்தனுபவிப்பாயாக.

தீயானது ஒரு இரும்பு குண்டை உள்ளும் புறமும் வியாபித்து எப்படித் தனது சக்தியால் பிரகாசிக்குமோ

அப்படியே பரப்பிரம்மம் உலகனைத்தையும் உள்ளும் புறமும் வியாபித்துத் தனது சக்தியால் பிரகாசிக்கிறது.

6. ஆதியந்தமற்ற பிரம்மம் அவித்தையின் நீக்கத்தாலன்றி வேறெந்த ஸாதனத்தாலும் அடையப்படமாட்டாது.

எது ஆத்மாவோ அதுவே நிகரற்றதும் அளவு கடந்ததும் உண்மைப் பொருளுமான பிரம்மம் என்று அறிய வேண்டும்; அது (ப்ருஹத்) பெரிதாயிருப்பதால் பிரம்மம் என்று கூறப்படுகிறது.

7. உபாதிகளற்றதும், சாந்தமானதும், முடிவற்றதும், ஒன்றேயாவதும், இரண்டற்றதும் (பூமா) அளவு கடந்தது எனக் கூறப்படுவதுமான பிரம்மம் எளிதில் அறியப்படுவதன்று.

உலகம் பிரம்மமே. பிரம்மத்தினின்று பிரிதாக எது ஒன்றுமில்லை. பிரம்மம் அல்லாது ஏதாவது ஒருபொருள் தனித்திருப்பதாய்த் தோன்றினல் அது கானல் நீரைப் போல் பொய்யானது.

8. பார்ப்பதெல்லாம் கேட்பதெல்லாம்பிரம்மமேயன்றி வேறல்ல உண்மையனுபவத்தை அடைந்தபின் ஒருவன் உலகை அத்விதீயப் பிரம்மமாகவே காண்கிறான்.

ஒரு பானையை எண்ணும் பொழுது மண்ணினுடைய ஞாபகம் நமக்குத்தானே எழுவதுபோல், வியாவஹாரிகப் பிரபஞ்சத்தை எண்ணும்பொழுது நமக்கு பிரம்மத்தின் எண்ணம் உதிக்கிறது.

9. ஒரு பானைக்கும் மண்ணிற்கும் காரியகாரண சம்பந்தம் எப்பொழுதும் எப்படி இருக்கிறதோ அப்படியே வியவஹார உலகிற்கும் பிரம்மத்திற்கும் அதே சம்பந்தம் இருக்கிறது; இது சுருதியாலும் யுக்தியாலும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

10. பானை முதலிய மண்ணாலான பாண்டங்கள் எப்படி மக்கள் அறியாமற் போனாலும் மண்ணேயாகுமோ அப்படியேமக்கள் அறியாமற் போனாலும் அவர்கள் செய்யும் செயலெல்லாம் பிரம்மத்தினிடமே பிரம்மத்தின் மூலமே நிகழ்கின்றது.

11. ஆகையால் நீ பிரம்மம். 'நான் பிரம்மம் அல்லன்' என்பது மாயை. மாயையினின்று உதிப்பது வேற்றுமை. எல்லாத் துன்பங்களுக்கும் அதுவே வேர்.

பிரம்மம் (மனதால்) அறிய முடியாததென்றாலும், ஸ்வயம் பிரகாசமாயிருப்பதால் அனுபவிக்க முடியாத

தன்று. (ஸத்யம ஞானம் அனந்தம் பிரம்ம) பிரம்மம் ஸத்தியமும் ஞானமும் எல்லையற்றதுமாகும் என்ற வேதாந்த வாக்கியம் அதை விளக்குகிறது.

12. காரணமாகிற மண்ணைப்பற்றி அறிந்தால் காரியமாகிற மண்குடம், மண்பானை முதலியவை அறியப்படுவது போல் பிரம்மத்தையறிந்தால் உலகம் அறியப்பட்டதாகிறது.

13. அனைத்தையும் பிரம்மமென்று அறிந்து கொண்ட ஞானிகளுக்கு தியானிப்பதற்கோ தியானிக்காமலிருப்பதற்கோ, பேசுவதற்கோ, செய்வதற்கோ செய்யாமலிருப்பதற்கோ என்ன இருக்கிறது?

எவர்கள் ஒப்புயர்வற்றதும் பரிசுத்தமானதுமான பிரம்ம பாவத்தை நாடவில்லையோ அவர்கள் பிறவியில் மனிதர்களாயினும் வாழ்க்கையில் மிருகங்களுக்குஒப்பாவர்; அவர்கள் வாழ்க்கை வீண்.

14. காணும் உலகைக் காணுததுபோல் கருதி ஒருவன் அனைத்தையும் பிரம்மம் என்று உணரவேண்டும். புத்திமானுகிய அவன்தன் மனதைச் சிதானந்த ரஸத்தால் நிரப்பி அந்த எல்லையிலா ஆனந்தத்தில் எப்பொழுதும் நிலைபெற வேண்டும்.

15. ஒப்புயர்வற்ற ஆனந்தத்தின் உறைவிடமாகிய பிரம்மத்தைப் பரத்துவமென உணர்ந்து உண்மையைக் கண்டுகொண்டவர்கள் அதில் சரண் புகுகின்றனர்.

நீரில் கரைந்துபோன உப்புக்கட்டியைக் கண்ணுல் காண முடியாது; நாவினுல் ருசித்தறியலாம். அவ்வாறே உள்ளத்தின் ஆழத்திலூடுருவியிருக்கும் பிரம்மத்தைவெளி இந்திரியங்களால் அறிய முடியாது.

16. தீர்க்கதரிசியாகிற குருவின் கருணை நிறைந்த உபதேசத்தால் ஏற்படும் ஞானம் கண்விழிப்பால்தான் அறிய முடியும். அவ்வுபதேசமாவது: "உன்னைச் சுற்றிக் காணப்படும் உலகம் நீயன்று; நீ பிரம்மமே."

## ஞானம்

எப்படி ஒளியின் உதவியில்லாமல்ஒருபொருள்ஒருபொழுதும் பார்க்கப்படுவதில்லையோ அப்படி மனதில் ஆராய்ச்சியில்லாமல் எதனுலும் ஞானம் அடையப் படுவதில்லை.

அஞ்ஞானத்தால் தோன்றிய அனைத்தும் ஞானம் உதித்தவுடன் மறைந்து போகின்றது.

கண்ணுடி போன்ற மனதானது பரிசுத்தமானுல் அதில் ஞானம் தானே விளங்கும். ஆகையால் மனதைப்

பரிசுத்தமாக்குவதில் கவனம் செலுத்த வேண்டும்.

தன்னாலோ பிறராலோ ஆத்மாவைக் கொள்ளவும் முடியாது, தள்ளவும் முடியாது; அதுவும் எதையும் கொள் ளுவதுமில்லை, தள்ளுவதுமில்லை இதுதான் உண்மையான ஞானம்.

வேதங்களிலும் தேவதைகளிடமும் உறையும் உன்னத மான ரகசியம் ஞானமே. அதுதான் பரிசுத்தமளிப்பவற் றுள் தலை சிறந்தது.

சிறந்ததும் ரகசியமானதுமான ஞானத்தைத் தன்ன டக்கமில்லாதவனுக்கு அளிக்கக் கூடாது; வைராக்கிய முடையவனும் குருவின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்ப வனுமான சீடனுக்குத்தான் அளிக்க வேண்டும்.

ஸமமானதும் சாந்தமானதும் ஸச்சிதானந்த வடி வினதுமான பிரம்மமே நான், அஸத்தான உடலல்லன் என்று இங்ஙனம் அறிவதுதான் ஞானம் என்று புத்திமான் களால் கூறப்படுகிறது.

நான் மாசற்றவன், அசைவற்றவன், அளவில்லாத வன், புனிதமானவன், அழிவற்றவன், சாவில்லாதவன், அஸத்தான உடலல்லன் என்று இங்ஙனம் அறிவதுதான் ஞானம் என்று புத்திமான்களால் கூறப்படுகிறது.

நான் நோயற்றவன், எதிலும் பிடிபடாதவன், துவந் துவங்களுக் கப்பாற்பட்டவன், எங்கும் நிறைந்தவன், அஸத்தான உடலல்லன் என்று இங்ஙனம் அறிவதுதான் ஞானம் என்று புத்திமான்களால் கூறப்படுகிறது.

நான் மாறுபடாதவன், எனக்கு உருவம்-இல்லை, குற் றமும் குறைவும் என்னிடமில்லை, நான் அஸத்தான உடலல் லன் என்று இங்ஙனம் அறிவதுதான் ஞானம் என்று புத்தி மான்களால் கூறப்படுகிறது.

எனக்கு குணமும் இல்லை செயலுமில்லை; நான் என்று முள்ளவன், சுதந்திரமானவன், அழியாதவன்; நான் அஸத் தான உடலல்லன் என்று இங்ஙனம் அறிவதுதான் ஞானம் என்று புத்திமான்களால் கூறப்படுகிறது.

அந்தக்கரணம் உள்ளவரை வெளி விஷயங்கள் புலனாகின்றன ; அந்தக் காரணமில்லையேல் வெளி விஷயங்கள் இல்லை. அறிபவன் அறிபவனாக எப்பொழுதும் (விஷயங்கள் இல்லாத பொழுதும்) இருக்கவே இருக்கிறான். துவைதத்திற்கு இருப்பில்லை.

தான் பரிசுத்தமான ஆத்மா என்று ஒருவன் உணரும் பொழுது தான் உடல் என்ற நினைவு அழிந்து போகிறது ; ஒருவன் விரும்பாவிடினும் அந்த ஞானம் அவன் மனிதன் என்ற எண்ணத்திலிருந்து அவனை விடுவித்து விடுகிறது.

மற்ற சாதனங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் ஞானம் தான் மோக்ஷத்திற்கு நேரான சாதனம் என்பது தெளிவாகின்றது. நெருப்பில்லாமல் எப்படிச் சமையல் இயலாதோ அப்படி ஞானமில்லாமல் மோக்ஷம் இயலாது.

தேத்தாங்கொட்டைப் பொடியானது தண்ணீரைச் சுத்தமாக்கி விட்டுக் கீழே படிந்து விடுவதுபோல் ஞானமானது அஞ்ஞானத்தால் அழுக்கடைந்த ஜீவனை அப்பியாசத்தால் அழுக்கற்றவனாக்கி விட்டுத் தன்னையும் மறைத்துக் கொள்ளுகிறது.

ஸம்ஸாரம் கனவு போன்றது, விருப்பு வெறுப்புக்கள் நிறைந்தது ; அதனுடைய காலத்தில் அது உண்மைபோல் பிரகாசிக்கிறது ; ஆனால் ஞான விழிப்பு ஏற்பட்டதும் மறைந்து போகிறது.

அரணிக் கட்டையைக் கடைவது போன்ற ஆத்ம தியானம் எப்பொழுதும் செய்யப்பட்டால் அதினின்று எழும் தீயானது அஞ்ஞானமாகிற விறகை முழுவதும் எரித்துவிடும்.

இருளில் ஏற்பட்ட திக்பிரமையானது ஒளியில் நீங்குவதுபோல் அஞ்ஞான நிலையில் ஏற்பட்ட அகங்காரம் மமகாரம் முதலியவையெல்லாம் தத்துவஸ்வரூப அனுபவத்தில் ஏற்படும் ஞானத்தால் உடனே அழிந்துபோம்.

தெளிந்த ஞானத்தையடைந்த யோகியானவன் ஞானக்கண்ணால் தன்னிடத்திலேயே உலகனைத்தும் இருப்பதாயும் ஆத்மாவே அனைத்துமாயிருப்பதாயும் காண்கிறான்.

## நாலு வகை

மனிதப் பிறவி, முக்தியடையும் விருப்பம், ஒரு மகா புருஷருடைய ஆதரவு ஆகிய இம் மூன்றும் அடைவதற்கரியவை. அவை ஈசுவர அனுக்கிரகத்தாலேயே அடையப்படுகின்றன.

எப்படியோ மனிதப்பிறவியை, அதிலும் புருஷ சரீரத்தை, அடைந்து வேதத்தையும் கற்றுணர்ந்து அதன் பின்னும், மூடனாய், ஒருவன் முக்திக்கு முயலாவிட்டால், அவன் தற்கொலை செய்து கொண்டவனுக்கொப்பாகிறான்; ஏனெனில் பொய்யான பொருள்களைப் பற்றிக் கொண்டு அவன் தன்னை மாய்த்துக் கொள்ளுகிறான்.

முக்திக்குதவும் சாதனங்களுள் பக்திதான் தலைசிறந்தது. தன்னுடைய உண்மை நிலையில் நாட்டமே பக்தியெனப்படும்.

விழிப்பு நிலையில் கனவு பொய்யாகிறது; கனவு நிலையில் விழிப்புலகம் இல்லை; ஆழ்ந்த உறக்கத்தில் இரண்டும் இல்லை; உறக்கமும் மற்ற இரண்டு நிலைகளில் இல்லை.

ஆகையால் முக்குணங்களால் சிருஷ்டிக்கப்பட்ட மூன்று நிலைகளும் பொய்யேயாகின்றன; எனினும் அவற்றிற்குப்பின் உள்ள ஸாக்ஷியோ குணங்களைக் கடந்து நித்தியமாய் ஏகமாய் அறிவு வடிவான மெய்ப்பொருளாய் விளங்குகிறது.

நாம் நாள்தோறும் கண்டனுபவிக்கும் உலகம் வியவகாரத்தில் உண்மையாகத் தோன்றினாலும் அடுத்த நொடியில் பொய்த்துப் போவதால் அது இருப்பில்லாத கனவுலகம் போன்றதேயாகின்றது.

ஞானத்திற்கும் கருமத்திற்கு மிடையே உள்ள வேற்றுமை மலை போன்று அசைக்க முடியாதது.

பகவான் வியாஸர் தமது குமாரருக்கு நீண்ட ஆலோசனையின் பயனாய்ப் பின்வருமாறு உபதேசித்தார்; வேதத்தில் இருவேறு மார்க்கங்கள் கூறப்பட்டுள்ளன— ஒன்று பிரவிருத்தி (கர்மமார்க்கம்) மற்றொன்று நிவிருத்தி (ஞான ஸந்நியாஸமார்க்கம்).

அத்விதீய பிராம்மீஸ்திதியுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் தேவர்களும் அசுரர்களுக்கொப்பானவர்களே. அவர்களுடைய உலகங்களும் அசுரத்தன்மையுடையனவே.

காமத்திற்கும் கர்மத்திற்கும் காரணத்தை அறியாதவனுக்கே சோகமும் மோகமும்; ஆகாயத்தைப்போல் பரிசுத்தமான ஆத்மாவைக் காண்பவனுக்கில்லை.

மதிமயக்கம் நீங்கியவன் ஒன்றேயாகிய ஆத்மஞானத்தை வேறு ஞானத்துடனோ கருமத்துடனோ பிணைக்க விரும்புவதில்லை,

ஆதிகாரணம் 'அஸத்' எனக்கூறுபவன் மலடி மகனுடன் வியாபாரம் செய்பவன், கானல் நீரால் தாகத்தைத் தீர்த்துக் கொள்பவன்.

புத்திமான் எல்லாக் காலத்திலும் கவனத்துடன் தனது ஆத்மாவை தியானிக்க வேண்டும்; காணப்படாவிட்டாலும் அது ஒன்றே உண்மை; வெளியுலகாய் அது விளங்கும் பொழுதும் ஸாக்ஷி மாத்திரமாகவே உளது.

ஆகையால் அடையப்படுவது துக்கத்திற்குக் காரணம்; அடைந்த மறுகணத்தில் அது ருசியற்றதாகிறது; அறிவிலிகளே அதை நாடுவர்.

மூன்று உலகங்களிலும் ஒவ்வொருவனும் சுகத்தையடையவே பாடுபடுகிறான், துக்கத்திற்காக அன்று. துக்கத்தின் காரணம் நீங்கினால் சுகம் வரும், துக்கத்திற்குக் காரணங்கள் இரண்டு; ஒன்று உடலில் 'நான்' என்ற அபிமானம்; இரண்டு, உடலுடன் சம்பந்தப்பட்ட பொருள்களில் 'என்னுடையது' என்ற அபிமானம்.

கனவில் பெற்ற மந்திரஉபதேசம் நனவில் உண்மையாகின்றது; கனவில் கிடைத்த நல்லாசியால் காலையில் விழித்துக் கொண்டபின் விரும்பிய பொருள் கிட்டுதலும் காணப்படுகின்றது; ஆகையால் பொய்மையினின்றுங்கூட மெய்மை முளைக்கலாம் என்பது இதனால் அறியப்படும்.

உபநிஷதங்களின் உபதேசத்திற்குறைவிடம் உண்மை. உண்மையாவது சூது இல்லாமையும் வாக்கிலும் மனதிலும் காயத்திலும் கபடமில்லாமையுமாகும்.

அந்தராத்மாவாய் விளங்கும் பிரம்மத்தையறிவதால், பிறவிச்சுழலுக்கும் காமத்திற்கும் கருமத்திற்கும் மூலக் காரணமான அவித்தை மிச்சமில்லாமலே அழிந்து போகின்றது.

முக்தியாவது 'நான்' 'என்னுடையது' என்ற எண் ணங்களை அறவேயொழித்து ஆத்மானுபவத்தில் நிலை பெறுதலாம்.

கனவு மனதின் கற்பனை, கண்ட மறுகணத்தில் அது காணப்படாமல் போவதால் அது பொய்.

நல்லதும் பொல்லாததும், உயர்ந்ததும் தாழ்ந்ததும், விரும்பத்தக்கதும் வெறுக்கத்தக்கதுமான காட்சிகளை ஒருவன் கனவில் காணும் பொழுது அவையெல்லாம் உள்ளபடி உண்மை என்றே நினைக்கிறான்; கனவு நிலையில் அவை பொய்யென்ற எண்ணம் சிறிதுகூட இல்லை. அவ் வாறேதான் ஞானோதயம் ஏற்படும் வரை இவ்வுலகும்.

தன்னுடைய சிருஷ்டியில் இறைவன் ஒருபொழுதும் இரக்கமற்றவனாகவும் நீதிவழுவியவனாகவும் இருப்பதில்லை.

ஒருவன் உடலைப்பற்றிய கவலை நீங்காமல் ஆத்மாவை அறிந்தனுபவிக்க ஆசைபட்டால் அவன் ஒரு முதலையைத் தெப்பம் என்று நம்பி அதன் மேலேறி ஓர் ஆற்றைக் கடப் பதற்காசைப்படுபவனைப் போலாவான்.

எண்ணிறந்த சாஸ்திரங்களில் விளக்கப்பட்டுள்ள உண்மையை நான் அரை சுலோகத்தில் கூறுகிறேன். (ப்ரஹ்ம ஸத்யம் ஜகன் மித்யா ஜீவோ ப்ரஹ்மைவ நாபர:) பிரம்மம் மெய், உலகம் பொய், ஜீவன் பிரம்மமேயன்றி வேறன்று.

என்னுடைய மனமெங்குளதோ அங்கு உனது உருவம் இருக்கட்டும்; என்னுடைய தலை எங்குளதோ அங்கு உன் னுடைய திருவடி இருக்கட்டும்.

## பிரார்த்தனை

தாயே! மந்திரமோ, தந்திரமோ, ஸ்தோத்திரமோ நான் அறியேன். ஆவாஹனமோ தியானமோ செய்ய அறியேன். உன்னுடைய புகழைப் பாடவும் அறியேன். உனது பூஜா முத்திரைகளை அறியேன். எனக்கோ அழக் கூடத் தெரியாது. ஆனால் உன்னை வந்தடைந்தால் அது துன்பத்தை யெல்லாம் போக்கும் என்ற இது ஒன்று தெரியும்.

உன் கட்டளையை உணராமையாலும், பொருளில்லாக் கொடுமையாலும், ஊக்கக்குறைவாலும், விதிக்கப்பட்டவை களைச் செய்யச் சக்தியில்லாமற் போனமையால் உன் திரு வடிகளினின்று எனக்கு எந்த நழுவுதல் ஏற்பட்டதோ அது உன்னால் மன்னிக்கப்படுதல் வேண்டும். தாயே! அனை வரையும் கைதூக்கி விடுபவளே! மங்களஸ்வரூபியே! கெட்டமகன் பிறக்கலாம். ஒரு போதும் கெட்டதாய் இல்லை யன்றோ?

துர்க்காதேவியே! ஆபத்துக்களில் அழுந்திய சமய தில் நான் உன்னை மனதால் நினைக்கிறேன். கருணை கடலின் நாயகியே! இதை என் துர்க்குணமாகக் கொள் ளாதே; பசிதாகக் கொடுமையால் வருந்துபவர்கள் தாயாரை நினைப்பது இயற்கை யன்றோ?

சாஸ்திரவிதிகளை அறியாமையாலும், பொருளின்மை யாலும், வழிதெரியாமையாலும், சோம்பலாலும் நான் செய்ய வேண்டியதைச் செய்யாமலிருக்கிறேன். ஆகையால் உன் திருவடிகளுக்கு நான் இழைத்த பிழைகள் எண்ணிறந் தவை. தாயே! உலகைக் காப்பவளே! என்பாவங்களைப் பொறுத்தருள வேண்டும்.

தாயே! பூமியில் நல்ல ஸ்வபாவமுள்ள பிள்ளைகள் பலர் உனக்கு இருக்கிறார்கள். ஆனால் அவர்களிடையில் நான் ஒருவனே மதி கெட்டபிள்ளை. மங்களஸ்வரூபியே! உன்னைத் தாயென்று போற்றாமல் விட்டு விட்டது என் குறை. எனினும் நான் போனபடி என்னை விட்டுவிடுதல் உனக்குத் தகுமோ. கெட்டமகன் பிறக்கலாம். ஒருபோதும் கெட்டதாய் இல்லையன்றோ?

எனக்கு மோக்ஷத்தில் ஆசையில்லை ; பெருமைபெறவும் இச்சையில்லை ; விஞ்ஞானத்திலும் நோக்கமில்லை. சுகத்திலும் அவா இல்லை. சந்திரன் போன்ற முகமுடையவளே! தாயே! 'ம்ருடானீ, ருத்ராணீ, சிவா சிவா, பவானீ' என்று ஜபம் செய்யும் பொருட்டு எனக்குப் பிறவி வரட்டும் என்று உன்னை நான் பிரார்த்திக்கின்றேன்.

உலகில் எங்கும் என்னைப்போல் பாவம் செய்தவருமில்லை. உன்னைப் போல் பாவத்தைப் போக்கும் சக்தியும் இல்லை. தேவி ! இதை எண்ணிப்பார்த்து உன்னிஷ்டம் போல் செய்.

சிவனே ! பசுபதியே ! பார்வதீபதியே ! வழிதெரியாத காடு போன்று துன்பம் நிறைந்த இந்த ஸம்ஸாரத்திலிருந்து என்னைக் காத்தருள்வாயாக.

சிவனே! கைகளாலோ கால்களாலோ, காதுகளாலோ, கண்களாலோ, பேச்சாலோ, உடலாலோ செயலாலோ மனதாலோ என்னென்ன பிழைகள் செய்துள்ளேனோ செயத்தக்கதை விட்டதாயினும், தகாததைச் செய்ததாயினும், அவற்றையெல்லாம் பொறுத்தருள் வாயாக. கருணைக் கடலே ! மகாதேவா ! சம்போ !
உன் நாமம் வெற்றியுடன் விளங்குவதாக.

யௌவனத்தில் சரீரம் நல்ல திடமுள்ள தாயினும் விஷயம் என்னும் விஷத்தைத் தலைகளில் தரிக்கும் ஐந்து பாம்புகளால் மர்மஸ்தானங்களில் கடிக்கப்பட்டு விவேகத்தையிழந்து பிள்ளை பெண்டாட்டி பணம் உண்டி சுகம் என்றவற்றில் ஆழ்ந்து சிவத்தியானமே இல்லாமல் என்னுடைய இருதயத்தில் அபிமானமும் கர்வமும் குடி கொண்டிருந்தது. சிவனே ! மஹாதேவனே ! சம்புவே? என்னுடைய பிழையைப் பொறுத்தருள்வாய்.

கிழப்பருவத்தில் இந்திரியங்கள் செயலற்றுப் போய் புத்தியும் சக்தியிழந்து ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களாலும் பாவத்தாலும் நோய்களாலும் உற்றார்களின் பிரிவாற்றாமையாலும் தளர்ந்து எல்லோரும் இரங்கும்படியான நிலையிலிருந்து கொண்டு வீணான ஆசைகளில் மனதை அலையவிட்டு சிவத்தியானம் சிறிதுமின்றி யிருக்கின்றேன்.

சிவனே! மஹாதேவனே! சம்புவே! என்னுடைய பிழையைப் பொறுத்தருள்வாய்.

பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஒவ்வொரு நாளாக ஆயுள் அழிந்து போகிறது; யௌவனம் கழிகின்றது; சென்ற தினங்கள் திரும்பிவருவதில்லை: காலம் உலகை விழுங்கி விடுகிறது; நீரில் குமிழிபோல்இருக்கிறது செல்வம், வாழ்க்கை மின்னலைப்போல் நொடியில் மறைவதாயுள்ளது; ஆகையால் சரணடைந்தவர்களைக் காக்கும் உன்னை நான் இப்பொழுது வந்தடைகின்றேன். என்னைக்காத்து அருள் புரிவாயாக.

எவருடைய விளக்கமானது இல்லாதது போன்ற பொருள்களிடை உண்மை வடிவாய்ப் பிரகாசிக்கின்றதோ, எவர் தம்மையடைந்தவர்களை 'நீ அதுவாக' இருக்கிறாய் (தத்-த்வம் அஸி)' என்னும் வேதவாக்கினால் நேரே போதிக்கிறாரோ, எவரை ஸாக்ஷாத்கரிப்பதால் பிறவிக்கடலில் மீண்டும் திரும்புதல் ஏற்படாதோ, அந்த ஸ்ரீ குரு மூர்த்தியின் வடிவான தட்சிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம்.

பிறவித்துன்பத்தைப் போக்குபவரும், மூவுலகிற்கும் குருவும், ஞானிகளுக்கு அபரோட்சானுபூதியை அருள்பவரும் ஆகிய பகவானுக்கு நமஸ்காரம்.

ஸம்ஸாரஸாகரத்தில் முழுகிய நான் அதிலுள்ள துன்பங்களைக் கண்டு நடுங்குகிறேன். காமம் பேராசை அஞ்ஞானம் முதலிய தீமைகளால் பிணிக்கப் பட்டுள்ளேன். பவானீ, எனக்கு பலமாயும் புகலிடமாயுமுள்ள உன்னைச் சரணடைகின்றேன்.

நான் தானமும் செய்யவில்லை, தியானமும் செய்யவில்லை. நான் சாஸ்திரங்களையும் வாசிக்கவில்லை, ஸ்தோத்திரங்களையும் செய்யவில்லை. எனக்கு மந்திரங்கள் தெரியாது, பூஜை செய்யவும் தெரியாது. எனக்கு வைராக்கியமில்லை. பவானீ, எனக்கு பலமாயும் புகலிடமாயுமுள்ள உன்னைச் சரணடைகின்றேன்.

சுத்தஸ்படிகம்போல் பரிசுத்தமான பரமசிவன் என்னுடைய பிழைகளை மன்னித்து அருட்செல்வத்தை அளிக்கட்டும்.

சுபம்.

## ஆசார்ய பதாவலம்பன ஸ்துதி

ஓமித்யசேஷ விபுதா : சிரஸா யதாஜ்ஞாம்
ஸம்பிப்ரதே ஸுமமயீமிவ நவ்ய மாலாம் |
சங்காரஜாப ரதலப்ய பதாப்ஜ ஸத்வம்
ஸ்ரீசங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் || 1

நம்ராளி ஹ்ருத் திமிர சண்டமயூக மாலின்
கம்ரஸ்மிதாபஹ்ருத குந்தஸுதாம்சு தர்ப்ப |
ஸம்ராட் யதிய தயயா ப்ர பவவேத் தரித்ர :
ஸ்ரீசங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் || 2

மஸ்தே துரக்ஷர ததிர்லிகிதா விதாத்ரா
ஜாகர்த்து ஸாத்வஸ லவோபி நமேஸ்தி தஸ்யா |
லும்பாமி தே கருணயா கருணும்புதே தாம்
ஸ்ரீ சங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் || 3

சம்பாலதா ஸத்ருச பாஸ்வர தேஹயுக்த
ஸம்பாதயாம்யகில சாஸ்த்ரதியம் கதா வா |
சங்கா நிவாரண படோ நமதாம் நராணும்
ஸ்ரீசங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் || 4

கந்தர்ப தர்பதளனம் கிதவை ரகம்யம்
காருண்ய ஜந்ம பவனம் க்ருத ஸர்வ ரக்ஷம் |
கீநாச பீதி ஹரணம் ச்ரிதவாநஹம் த்வாம்
ஸ்ரீசங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் || 5

ராகா ஸுதாகர ஸமான முக ப்ரஸர்ப்பத்
வேதாந்த வாக்ய ஸுதயா பவ தாப தப்தம் |
ஸம்ஸிச்ய மாம் கருணயா குருராஜ சீக்ரம்
ஸ்ரீசங்கரார்ய மம தேஹி பதாவலம்பம் || 6

யத்னம் விநா மதுஸுதா ஸுரதீர்க்கிகாவ
தீரிண்ய ஆசு வ்ருணதே ஸ்வயமேவ வாச: |
தம் த்வத் பதாப்ஜ யுகளம் பிப்ருதே ஹ்ருதா ய :
ஸ்ரீ சங்கரார்ய மம தேஹி பாதவலம்பம் || 7

ஸ்ரீ சங்கரார்ய கருணுவசத : ப்ரணீதம்
ஸ்தோத்ரம் ததீய மனுவர்ணயுதம் ததங்க்ர்யோ |
பக்த்யா ஸமர்ப்பித மிதம் பட தாம் நராணும்
வித்யாம் விரக்தி மதுலாம் குருராட் ததேது || 8